உ
கணபதி துணை.

---

திருக்கருவை

# வெண்பாவந்தாதி.

மூலபாடம்.

---

அதிவீரராமபாண்டியராசன்

அருளிச்செய்தது.

—§—

திருத்தணிகைக்

கந்தப்பையர் குமாரர்

சரவணப்பெருமாளையரால்

பிழையறப்பரிசோதித்து

அச்சிற்பதிப்பிக்கப்பட்டது.

---

துர்முகி௵ சித்திரைமீ

---

இதன் விலை - அணா*[illegible]*



# திருக்கருவை

# வெண்பாவந்தாதி.



காப்பு.

நண்பான தென்கருவை நாதனார் தம்பேரில்
வெண்பாவந்தாதி விளம்பவே-பண்பாக
மைம்மலையு மெய்ம்மலையு மாற்று புகழ்படைத்த
கைம்மலையு மாமுகத்தோன் காப்பு.

---

சீரணிந்த தென்கருவைச் செல்வனே யொப்பனையாள்
வாரணிந்த கொங்கை மணந்தோனே-காரணிந்த
கண்டனே நின்பொற் கழலல்லாற் காதலித்த
தொண்டனேற் குண்டோ துணை ௧.

துணைவியொடு மால்விடைமேற் றோன்றிவினை நீக்கி
யிணைமலர்த்தா ளென்சிரத்தி லேற்றிப்-பணிவிடைக்கு
வேண்டாத வென்னை வலியவிலை கொண்டுதடுத்
தாண்டான் கருவை யரன். ௨.

அரவணிந்த தென்கருவை யாளுடையான் வேதம்
பரவுங் களவிற் பரமன்-திருவடியை
நேர்ந்தார்க் கணித்தாகு நேரா துளமயக்கஞ்
சேர்ந்தார்க்கு முத்தியது சேண். ௩.

சேணிற் கொடி நடங்குந் தென்கருவை யம்மானே
கோணைப் பிறையணியுங் கோமானே-பேணித்
தொடுக்குங் கவிதைத் தொழும்பனுக்கு வந்த
விடுக்கணை களையாத தென். ௪.

என்னெஞ்சில் வைத்தற் கினியதவம் யாதுசெய்தேன்
பொன்னஞ் சிலையாற் புரமெரித்த-முன்னவனே
யன்னம் பயில்கருவை யானே யரவுதொழப்
பொன்னம் பலத்தாடும் பூ. ௫.

பூமருவு வேதன் புயல்வண்ணன் கண்டறியாத்
தாம மணிமுடியுந் தாளிணையும் - யாமறிய
வாழுங் கருவை வளநகரில் வந்துநின்றான்
றாழுஞ் சடைக்களவீசன். ௬.

ஈசனே யென்று மிமயமயி லொப்பனையா
ணேசனே யென்று நினைந்துருகிப் - பேசினே
னல்வினையைக் கண்டே னவையற்றேன் வாழ்வுற்றேன்
வல்வினையைக் கண்டிலேன் மற்று. ௭.

மற்றொரு தெய்வத்தை வாழ்த்தேன் முழுக்காதல்
பற்றி யுளத்துவைத்துப் பாவியேன் - சிற்றடியே
னும்பருமா லும்போற் றொருவன் கருவைநகர்
நம்பெருமா னல்லாது நான். ௮.

நானிலத்தோர் முன்னே நலனழிந்து நானிருந்தாத்
கான நறும்பூங் களவீச - வினமுனாத்
தென்னைச் சிரிப்பாரொன் றெண்ணாதே யெம்பெருமா
னுன்னைச் சிரிப்பாரு முண்டு. ௯.

உண்டுபல குற்ற முனையுடைந்தே னதனாற்
கண்டு பொறுத்தல் கடன்கண்டாய் - பண்டுதிரஞ்
சிந்த வடித்தவனைச் சீறாது பாசுபதந்
தந்தருக லிங்கநா தா. ௰.

நாதா தமிழ்க்கருவை நம்பா வெனக்கினிய
தாதா வெனவுன் சரணடைந்துங் - காதின
வெவ்விடையின் வீதி விடங்கனே நாடோறு
மிவ்விடரின் வாடுவதென் யான். ௰௧.

யாவ னமர ரிடர்தீர நஞ்சுண்டான்
யாவன் கருவை யினிதுறைந்தான் - யாவன்
றவநேர்மை கண்டு தனக்கடிமை கொள்வா
னவனே யெனையாண் டவன். ௰௨.

ஆண்டவனே தென்கருவை யாதியே யாடரவம்
பூண்டவனே யென்று தினம் போற்றிடவு - நீண்டதுயர்
போகா திருக்குமோ பொங்கிருளு நிற்குமோ
மாகா தவன்றேர் வரின். ௰௩.

வரந்தருமிப் பார்புரக்கும் வாழ்வுதரும் விண்ணோர்
தரந்தரும்பே ரின்பந் தருமால்-பரந்து
துளவீசன் றேடுந் துணைத்தாட் கருவைக்
களவீச னென்றுரைத்தக் கால். ௰௪.

காலத்தாற் காலு பட்டாற் கருமறவி
சூலத்தா லாவி தொலைவனோ-ஞாலத்துட்
டேன்பற்றும் பூங்களவித் செல்வன் றிருவடியைத்
தான்பற்றும் பற்றுடையான் றான். ௰௫.

தானேவந் தென்னைத் தடுத்தடிமை கொண்டானை
யானே பிறக்கு மெரு பிறப்பும்-வானிற்
சிறந்திருக்குந் தென்கருவைச் செல்வனையென் றுமன்
மறந்திருக்கு மோவென் மனம். ௰௬.

மனமொழிந்து காம மடக்கொழிந்து மாறுச்
சினமொழிந்து வாதனையுந் தேய்ந்தா-லினிய
குருக்களாய் வுந்தடிமை கொண்டுவீ டுய்க்குந்
திருக்களா வாழுஞ் சிவம். ௰௭.

சிவகருமஞ் செய்யார் திருநீறு சாத்தார்
தவநிலையாஞ் சைவநெறி சாரா-ரவனிதனிற்
காண்பரந்த பச்சைக் களாநிழலைக் கைதொழா
ரேண்பிறந்தார் மானிடரா யின்று. ௰௮.

இன்று வருந்துயரந் தீர்ந்தோ மினிச்சிலநாள்
சென்று வருந்துயரந் தீர்ப்பாரா-ரொன்று
வருந்தாதே நெஞ்சே மவர்க்களவி னீழ
லிருந்தா னொழிப்பா னிடர். ௰௯.

இடர்க்கட லுக்கோட மிதயவிருட்கிரவி
யுடற்பகையை வேரறுக்கு மொள்வா-ளிடப்புறத்தைச்
சூல்வண்ண மேகச் சுரிகுழ லுக்கீந் தருளும்
பால்வண்ண நாதன் பதம். ௨௰.

பதமறிந்து வாய்பார்த்துப் பற்றுத புல்ல
ரிதமறிந்தாங் கின்சொ லியம்பி-மதிகலங்கி
நன்னாள் கழித்துவிட்டே னுதமுக லிங்கவுனை
யெந்நா ளினைப்பே னினி. ௨௧.

இனிய வமுதை யிருங்களாவின்கட்
கனியைவளர் முக்கட் கரும்பைப்-பனியிமயக்
கொம்பினொடுங் கண்டேன் கொடும்பாவமோகவிடாய்
வெம்புதுயர் கண்டிலேன் மேல். ௨௨.

மேலாம் பதத்தில் விடுவையோ வன்றியென்னை
யேலா நரகத் திடுவையோ-சீலமிலா
வன்சித்த ருள்ள மருவாக் களவீச
வுன்சித்த மேதோ வுரை. ௨௩.

உரைகடந்த வேதத் துயர்வெற்பை யுள்ளங்
கரைகடந்த ஞானக் கடலை-விரிபூ
மருக்கோல வண்டுநுகர் வண்களா நீழற்
றிருக்கோயி லிற்கண்டேன் சென்று. ௨௪.

சென்றது காலஞ் சிதைந்த திளமைநல
நின்றதுசா வென்று நினைந்துருகி-மன்றி
னடிக்கின்ற பால்வண்ணர் நாமமெண்ணு மாந்தர்
படிக்கின்ற நூலெல்லாம் பாழ். ௨௫.

பாழிற் சமயப் படுகுழியில் வீழாம
லாழி லெனைக்காத் துதவினாய்-காழி
வருமதலைச் சொற்கா மலர்ந்தமுக லிங்கா
பெருமதலையாய பேறு. ௨௬.

பேறுபெற்றேன் வாழ்ந்தேன் பிறருக் கினியஞ்சே
னாறுபெற்ற வேணியனுக் காட்பட்டே-னாறுவட்டஞ்
சிந்தித்தே னெஞ்சிற் றிருக்களவைக் கைகூப்பி
வந்தித்தேன் றீர்ந்தேன் மயல். ௨௭.

மயக்கமொழி நெஞ்சே மதிமுகமு மூன்று
சயக்கமல மன்னதிருக் கண்ணும்-வியககுநடை
யன்னவயற் கருவை யாரியன் றொழுதாற்
பின்னை நமக் குண்டோ பிறப்பு. ௨௮.

பிறந்த பிறப்பிற் பெரும்பயனை யோரா
ரிறந்தவுட லெண்ணிறந்த தென்ப-தறிந்திருந்துங்
கானடரும் பச்சைக் களவீச வென்னுமன்
மானிடரா யேன்பிறந்தார் வந்து. ௨௯.

வந்து மனமறுக்க மாற்றுமல் வல்வினையேன்
வெந்துயரம் பார்த்திருக்க வேண்டினைகொல் - கொந்துமல
ரம்பினன் மேனி யழித்தழக லிங்கவுனை
நம்பினோர்க் கீதோ நலன். ௩௰.

நலனழிந்து மூப்படைந்து நாணழிந்து நோயாற்
புலனழிந்து கண்புதையும் போதி - லுலக
விறைவியொடும் பால்வண்ண வென்றென் றனையே
மறுகியழைப் பேனோடி வா. ௩௧.

ஓடுஞ் சகட்டி னுருளைபோல் வட்டமிட்டுக்
கூடும் பதத்திலெனைக் கூட்டாம - லாடியருள்
பூமலர்க்காச் சூழ்கருவைப் புண்ணியனே பூந்துளவன்
றாமனாக்கண் வைத்த சரண். ௩௨.

சரண கமலந் தலைமேல்வைத் தாண்டு
மரண பவமிரண்டு மாற்றிக் - கருணைசெய்து
பேறான தென்கருவைப் பெம்மா னளித்தானே
மாறா விதயமன மால். ௩௩.

மாலுண்டு நெஞ்சே வருந்துவதென் பால்வண்ணன்
காலுண் டலர்சொரியக் கையுண்டு - நாலுண்டு
வாழ்த்திட நாவுண்டு வரதன் கழலாவுண்டு
தாழ்த்திடவு முண்டே தலை. ௩௪.

தலையாய தென்கருவைத் தானுவே மேருச்
சிலையாற் புரமெரித்த தேவே - யுலகி
லடியவராந் தேவ ரமுதுண்ண நீதான்
கொடியவிட முண்டதென்ன கூறு. ௩௫.

கூறு படுமதியக் கோரமாம் விண்ணுடைக்க
நாறுமலர்த் தாளுரக நாடுடைக்கப் - பேறுபெற்று
மாயவனார் போற்ற வளருந் தமிழ்க்கருவை
நாயகனா ராடு நடம். ௩௬.

நடம்புரிதாள் போற்றிநின்ற நன்முனிய தென்றோ
விடங்கொ டமிழ்க்கருவை யீச - வடுங்கூற்றை
வேலினாற் போர்மழுவால் வெல்லாமற் செங்கமலக்
காலினால் வென்ற கருத்து. ௩௭.

கருத்தழிந்து கன்மக் கலைமறந்து கண்டார்
விருத்தனிவ னென்று வெறுத்துச்- சிரிக்கமுது
காடுகுடி யேற்றுமற் காத்தருளுக லிங்காவுன்
றூடுகுடி யேற்றுவதே நன்று. ௩௮.

நன்கவிஞ ருகவிய ருவளித்து நாடோறுந்
தன்கழலே பாடுந் தரமளித்தா- னன்கவைத்த
சூலத்தான் றென்பொதியத் தொல்லோன் றொழுதமணக்
கோலத்தான் றென்கருவைக் கோ. ௩௯.

கோவா யமரர் குழாம் போற்ற வாழ்ந்தாலுந்
தீவாய் நரகிடைப்போய்ச் சேர்ந்தாலும்- பாவையிடத்
தாண்டகையே தென்கருவை யையா வடியேற்கு
வேண்டுவதுன் பேரே மிக. ௪௰.

மிகத்தேடுஞ் செம்பொன்னும் வேட்டமனை யாரு
மகப்பேறு மங்குதவ வாரா- பகைத்துறுக்கிக்
கையாற் கதையேந்திக் காவன் வரிற்கருவை
யையா வென்றோதா தவர்க்கு. ௪௧.

அவல விடக்கை யழியுமலக் கூட்டைக்
கவலை நிறைத்த கடத்தைப் -புவனிதொறும்
வாளாச் சுமக்கும் வருத்தமொழி பால்வண்ணு
தூளா வயித்தியநா தா. ௪௨.

நாதனென வந்துன்னை நானடைந்தே னீயுமெனை
யாதரித்தெ னுள்ளுருக்கி யாட்கொண்டாய்- போதித்
திடைபோகத் தள்ளா தியற்கருவை நாதா
கடைபோகக் காத்தல் கடன். ௪௩.

கடலுலக மண்டாண்டங் காயமழி வீற்றி
யடலையுடன் முற்று மணிந்து- சுடலைதனிற்
ருழ்சடிலத் தென்கருவைத் தாணு தமியனு
யேழிசையாழ் வாசித் திடும். ௪௪.

வாசித்தே னில்லை வரதன் சிவாகமத்தைப்
பூசித்தே னில்லையுவன் பொன்னடியை- நேசித்தே
யொப்பனையாள் கேள்வனென வோதித் துதிக்கிலே
னெப்படியா னீடேறு வேன். ௪௫.

ஏறுவது கொல்லே றெரிசுடலை யாடரங்கு
கூறை புலித்தோன் மணிப்பூண் கோளரா-நாறு
கரந்தையணி கருவைக் காபாலிக் கென்பால்
வரந்தரவே றுண்டோ வகை. ௪௬.

வகிர்மதியக் கண்ணியான் வாணுதல்பா கத்தான்
புகர்முகக்கைம் மாவுரியைப் போர்த்தான்-முகரித்துத்
தென்னா தெனாவென்று வண்டிணாக்குந் தென்கருவை
யென்னாதன் வானோர்க் கிறை. ௪௭.

இறைப்பொழுது நீங்கா திருகண்ணு நெஞ்சுங்
கறைக்களமுஞ் செஞ்சடிலக் காடும்-பிறைக்கொழுந்தும்
புண்டரிக வாண்முகமும் பூங்களவி னீழலோ
னொண்டரளப் புன்மூர லும். ௪௮.

மூரலாற் ருளான் முளரித் திருக்கண்ணாற்
காருலாஞ் சோலைக் கருவேசர்-நேரலரூர்
சுட்டார் வெங்கூற்றை யுதைத்தார்தொல் வேளையெய்ய
வொட்டா தெரித்தா ருடல். ௪௯.

உடலி லுயிரா யுயிர்க்குயிரா னானைக்
கடலுல்கெல் லாந்தேடிக் காணேன்-கொடியதொரு
புன்கருவை மாற்றிப் புரந்தவனைப் புண்ணியனை
நன்கருவை யிற்கண்டே னான். ௫௰.

நானே யறிந்தவனை நாடற் கெளிதாமோ
கானேர் பசிய களாவனத்தான்-றானேயென்
னுள்ளச் சிலையை யுலைவாய் மெழுகெனவே
மெள்ளக் கரைக்கா விடின். ௫௧.

விட்டேன் பரசமய மேவாது வேர்களைந்து
சுட்டேன் பொய்க்காமத் தொடர்பெல்லாம்-பட்டுநுதற்
கைம்மா வுரித்த களாவீச னைக்கருவைப்
பெம்மானை யான்பணிந்த பின். ௫௨.

பின்னை தழுவுங் கணையேன் பெரும்பாந்தண்
மன்னு நெடுநாண் மலைவில்லே னென்னே
பகைத்தவர்த முப்புரமோ பால்வண்ணா நீயே
நகைத்தெரிக்கப் போமே னமக்கு ௫௩.

நமரங்கா டென்கருவை நாதவடி வெஞ்சூர்க்
குமரனுக் காளாய்ப் பணிந்த கோமான்-றமரக்
கருங்கடனஞ் சுண்டகளவீச னென்றான்
மருங்கடருமோ துயரும் வந்து. ருச,

வந்தடர மாட்டாய் பிரிவை மனக்கொண்டு
நைந்து துயருழக்கு நல்குரவே-யைந்துதலை
நாக்கவைத்த பாம்பணியு நாதன்பால் வண்ணனமை
நீக்கவைத்தா லெஃ செய்வாய் நீ. ருரு.

நீயேவந் துற்ற நெடுந்துயரந் தீர்த்திலையே
னாயேனையார் புரந்து நாட்டுவார்-போயிருவ
ராங்களவா வண்ண மழலுருவாய் நீண்டுவளர்
பூங்களவி னாதா புகல். ருசு.

புகழ்ந்திடுவேன் யானோ புவியேழுமாய
னகழ்ந்திடவுங் காணா வடிக-ளுகந்தோறுந்
தோற்றுமுகநான்காற் சுருதிக் கவிவிரிஞ்சன்
சாற்றுமுக லிங்கநா தா. ருஎ.

முகலிங்க நாதா முழுதுங் காத்தோம்பும்
புகலிங் கடியனுக்குன் போலச்-சகதலத்திற்
காருண்ட சோலைக் கருவேச நீயன்றி
யாருண்டு சொல்வா யறிந்து ருஅ.

அறியேன் மற்றொன்று மரும்பொருளே யென்றுங்
குறியே னெழுத்தைந்துங் கூறேன் -வறிதே
பிறந்தலுத்தேன் றென்கருவைப் பெம்மானே மீள
விறந்த லுத்தே னென்செய்தே னியான். ருகூ.

என்செய லுன்றாளி வினியமலர் சாத்துவதே
யுன்செய லென்றன்ப மொழிப்பதே - மின்புனையும்
வேணியாய் தென்கருவை வேந்தே யனலேந்தும்
பாணியாய் வேதாதி பா. சூய.

பாகம் பழுத்த பவளக் குணக்குன்றே
மோகங் கடந்த முதல்வனே-யாகமன்றா
லாய்கருவை யானே யமலா வடியேனைத்
தாய்கருவை யானே சரண். சூக.

சரணம் விதியின் றலையுழிவாக் கர்த்தர்
பரமகதி யருட்கண் பார்க்கிற் - றிருவடியார்
வன்பிறவித் துன்பமெல்லா மாற்றுமுக லிங்காவென்
புன்பிறவித் துன்பமெல்லாம் போம். ௧௨.

போதமறியேன் புன்றகவி விண்ணப்ப
மேதுந் திருச்செவியி லேறுமோ - சீதநிலாத்
திங்க ளணியுந் திருச்சடைமேற் புன்பூளை
தங்கவணி யுங்கருவே சா. ௧௩.

சாதன் முடுகிற் றனைமறந்து நாவிறங்கு
மாதுயரிற் சற்றும் வருந்தறியே - னாதலினு
லப்பொழுதைக் கிப்பொழுதே யன்பால் வழுத்துகின்றே
னெப்பனையாள் பாகா வுனை. ௧௪.

உனைத்துதித்த நாவா லுறுதியென்றோர் தெய்வந்
தனைத்துதியேன் சென்னியுறத் தாழேன் - நினைத்துணையுஞ்
சிந்தியேன் வாழ்த்தேன் திருக்களவி னாயகனே
வந்தியேன் பற்றேன் மனம். ௧௫.

பற்று தழற்சுடலை மன்றிற் பதமெடுத்துச்
சுற்று பவுரிகொளுந் தூயோனே - கொற்றவனே
மட்டொழுகும் பூங்களா வள்ளலே யென்றுரைக்கின்
விட்டொழிந்து போமே வினை. ௧௬.

வினைவிலங்கை வெட்டுமருள் வீட்டின்பங் காட்டு
நினையுநினை வெல்லா நிரப்பங் - கனவிதழிப்
பூமாலை யெண்டோட் புனிதன் களாவனத்துக்
காமாரி பொன்னங் கழல். ௧௭.

கழலாப் பிறவிக் கடற்சுழியிற் பட்டுச்
சுழலா வறிவு தொலைந்தே - னிழல்சுளித்துக்
குன்றதிர்க்கு மாவுரிவைக் கோமானே பால்வண்ண
வென்றழைப்பேன் வேறறியே னே. ௧௮.

ஏதமகற்றி யிருமை பெருக்கமெனும்
வாதமகற்றிடனை வாழ்வித்தான் - காதுபுலித்
தோலுடையான் பைங்களவின் ஆறுடையான் கூற்றுதைத்த
காலுடையான் பஞ்சாக் கரன். ௧௯.

கரங்கொண் டலர்தூவார் கண்கொண்டு பாரார்
சிரங்கொண் டடியிறைஞ்சல் செய்யா-ருரங்கொண்ட
வெற்றில்வருந் தென்கருவை யீசனுக்காட் செய்யாமற்
கூற்றுவற்காட் செய்வார் குணம். ௭௰.

குணக்குன்றே தென்கருவைக் கோவே நறும்பூ
மணக்குங் களாவனத்து வாழ்வே-கணப்பொழுது
மன்னை மறந்த வருங்குழவி யுய்ந்தாலு
முன்னை மறந் துய்யா துயிர். ௭௧.

உயிரிறந்த பொய்க்கூட்டை யுற்றா ரெடுத்து
வயிரவிற கிற்றீ மடுத்துப்-பெயரழியச்
சுட்டுநீ றாங்குமுனஞ் சொல்லீர் கருவைமன்றி
னட்டமிடுங் காலி னலம். ௭௨.

நலனழிந்து நல்வினைபோய் நாணழிந்து நல்ல
குலனழிந்து நல்குரவு கூர்ந்து-பலரிகழ
நிற்ப ரனைத்துயிராய் நின்றானைத் தென்கருவைத்
தற்பரனைத் தான்றுதியா தார். ௭௩.

தாரமனை மட்டுந் தனையறிந்தோ ரூர்மட்டுஞ்
சேருமுற வல்லூர்த் தெருமட்டுஞ்-சார்வதன்றி
நங்கருவை யானென்ற நல்வினைபோற் செல்கதியி
னெங்குமுத வாரோ யிவர். ௭௪.

இவருறவ ரென்ப ரிவர்பகைஞ ரென்ப
ரவரவராற் செய்வதொன்றங் காமோ-வெவரோனுந்
தேனொழுகும் பூங்களவார் செய்விப் பதன்றியிந்த
மானிடரா லுண்டோ வசம். ௭௫.

வசமறுகித் துன்பம் வருத்தமெலிந் தாலு
மசையுறுநோய் கொண்டாலு மையா-விசையளிசேர்
தாமமரு வேணித் தமிழ்க்கருவை நாதாவுன்
னாமமற வாதடியே னா. ௭௬.

நாவுக் கழகுனது நாமநயந் துரைக்கும்
பாவுக் கழகுனையே பாடுவது-நாவில்
கலைக்கழகு ஞானங் கருவை யானேயென்
றலைக்கழகு நின்கமலத் தாள். ௭௭.

தாளா லெனது தலையெழுத்தை யுஞ்சிதைத்து
மீளா வடிமை விலையெழுதி - யாளா
யுளவருத்தந் தீர வுவந்தெனைவந் தாண்டான்
களவனத்தி லொப்பனையா கன். எஅ.

கன்னற் சிலைவளையக் கால்வளைய நேர்புருவ
வன்னமனை யார்கலவிக் காளாகி - முன்னித்
திரிந்ததெல்லாம் போதுமப்பா தென்கருவை வேந்தே
பரிந்தடிமை கொள்வாயிப் பால். எகூ.

பாலன் பசிக்கிரங்கிப் பாற்கடலை யீந்தருளு
நீல மணிமிடற்ற னீயன்றே - சோலைதொறுந்
தேனிரங்குந் தென்கருவைச் செல்வா கொடுந்துயரால்
யானிரங்க நீயிரங்கா யென். அ௰.

இரங்கா யெனினு மிரங்கினும் யான்வேண்டும்
பரங்காண் கருவைப் பரனே - நிரந்தரமு
மிற்கணவ னீத்தாலு நீங்கா திருக்குமொரு
பொற்புடைய கற்புடையாள் போல். அக.

கற்பங் கடந்து கடவுளராய் வாழ்வரோ
பொற்பங் கயன்முதலாம் புத்தேளி - ரற்புதமே
தெவ்வடக்கு சூலத்தார் தென்கருவை நாதனார்
வெவ்விடத்தை யுண்ணு விடின். அஉ.

விடக்குடலிற் புக்கு விரித்தவிருண் மாயைத்
துடக்கறுத்த ஞானச் சுடரை - நடத்திற்
றலைமைபெற்ற தென்கருவைத் தாணுவைக் கண்டுள்ள
நிலைமைபெற்றே னீடேறி னேன். அ௩.

ஏறுபட்டுக் கல்லா லிருஞ்சிலையா லெற்றுண்டு
மாறுகட்ட மாற்றா லடியுண்டு - மூறுபட்ட
வாதையா லோகருவை வாணனே பொன்மேனி
பாதியாய்த் தேய்ந்தாய் பகர். அச.

பகர வருமெழுத்திற் பால்வண்ணா நின்னை
யகர முதலெம்பத் தொன் றாக்கிப் - புகலாதே
யஞ்செழுத்தா னென்பதென் னாதிமறை முதனா
னெஞ்சழுத்தி வாழு நிலம். அடு.

நிலத்திற் பிறந்தூடனே நீத்தோய் பசுமட்
கலத்திற் சிதையுமிந்தக் காய - நலத்திற்
கடியேறு பூங்களவிற் கண்ணுதலே மீள
வடியேன் கூடவா தருள். ௮௬

அருளுதவுந் துன்ப மகற்றியறி வாக்குந்
தெருளுதவும் வீட்டின்பஞ் சேர்க்கு - மருவார்
புனக்களவைக் கோயில்கொண்ட புண்ணியனென் றேத்த
மனக்களவைத் தீர்க்கு மருந்து. ௮௭

மருந்தா லொழியா மனத்துன்ப நோயா
யிருந்தா லுனையெவ்வா றேத்தித் - திருந்துபுகழ்ச்
சொன்மாலை சாத்துவேன் சொற்கருவை யாய்கடுக்கைப்
பொன்மாலை மார்பா புகல். ௮௮

புகையுந் தழல்கண்ணிற் பொங்குசினத் தாலே
பகைகொண்டு காலபடர் பற்றி - மிகவுந்
தகைவாத் துயர்தருமுன் றண்களவா வீசன்
கணைநா தனைமனமே காண். ௮௯

காவென்றுஞ் சங்கென்றுங் கார்முகி லென்றங்கவர்மேற்
பாவென்றும் பாடப் பதந்தெரிந்த - நாவென்றுந்
தன்னைப்பா விக்கத் தமிழ்க்கருவை நாதனு
மென்னைப்பா வித்தாரிப் பால், ௯௰

பருவ மழைத்துளியைப் பார்ப்பதுபோ லாயே
னுருகி யுணங்கியுடைந்தே - னறிவையுமை
வல்லவனே தென்கருவை வள்ளலே நீயுதவு
நல்லருளைப் பார்த்திருந்து நான். ௯௧

இருக்குந் திருக்கோயி லேலமலையே னெஞ்சோ
மருக்கொள் கயிலை வரையோ - திருக்களமேவா
சோதிமணி மன்றோ சுடர்விசும்போ பால்வண்ண
வோது மறையோ வுனக்கு. ௯௨

உனக்கடிமை நானல்லா துண்டு பல்லோ ரு
மெனக்குநீ யல்லாமல் யாரோ - நினைக்கனிவா
னுனைத்தே னென்று நற்கருவை யானேநீ
தானழைத்தா லன்றோ தரம். ௯௩

தரம்பிரித்துக் கொள்ளுந் தமிழ்ப்பாடல் கொண்டு
வரம்பிரித்து வாழ்வு வழங்கின் - விரிந்தநிலா
வேணிவைத்த தென்கருவை வெள்ளைவள்ள லேயுனக்கு
நீணிலத்தி லுண்டோ நிகர். ௯௪.

நிகரற்ற தென்கருவை நித்தனெனை யாளுந்
தகரக் குழலி தலைவன் - சகமடுத்த
வெள்விடைய னெந்தை விளங்கியுறை யுங்கோயிற்
கள்வடியுந் தண்பூங் களா. ௯௫.

களவிட்ட நெஞ்சாற் கருவையாய் நின்சீ
ரளவிட் டுனைத்துதிப்பே னல்லே - னுளவிட்டம்
பெற்றதன்றி நாயேனும் பித்தாய்ப் பிதற்றுபுன்சொல்
குற்றமின்றி நன்றிதெனக் கொள். ௯௬.

கொள்பவனு னீயே கொடுக்குமவன் கொள்பொருட்டால்
விள்வதென் கைம்மா று வேண்டுமோ - வுள்வதென்கோ
றேனிறைகொன் றைச்சடிலச் செல்வக் களவீச
பாணிறமெய் கொண்டாயிப் பார். ௯௭.

பார்முதலாய் வானப் பரப்பா யனைத்தினுக்குங்
கார்முதலா யுண்டியருள் காப்பாகிச் - சீர்முதலா
யார்க்குந் துணையாங் களவீச நின்னையன்றிப்
பார்க்கினுண்டோ வின்பம் பகர். ௯௮.

கங்கற் தொடருங் கழுமுட் படையுடைய
மங்கையுமை யொப்பனையாள் வாரணிந்த - கொங்கை
தழுவுந் திருமார்புந் தானுணரா நாயேன்
முழுவெந் துயர மும்போமோ. ௯௯.

மோனவிரத முனிவர் விழித்துறங்கு
ஞான துரியமுத னண்ணுவோர் - மானதத்தி
னுள்ளுவதுந் தன்னைமறந் தொன்றுவதும் பால்வண்ணு
தெள்ளுவது நின்மலர்த்தாட் சீர். ௱.

திருக்கருவைவெண்பாவந்தாதி - முற்றியது.

# பிரசித்தபத்திரிகை.

| பெயர் | விலை. ரூபா | அணா. |
|---|---|---|
| திருவள்ளுவர்குறளுரை. | ௮. | |
| இலக்கணச்சுருக்கவினாவிடை. | ௫- | ௮. |
| நன்னூற்காண்டிகையுரை. | ௫- | ௮. |
| வைராக்கியசதகவுரை. | ௧- | ௪. |
| ஆத்திசூடியுரை. | ஜி ௪ ந — | |
| கொன்றைவேந்தனுரை. | — | |
| வெற்றிவேற்கைமூலம். | — | ௮. |
| பாலபோதம். | — | |
| வாக்குண்டாமுரை. | ஜி ௩ ந — | |
| நல்வழியுரை. | — | ௰. |
| நன்னெறியுரை. | — | |
| இலக்கமுதலியவடங்கிய அன்னைப்பெயர்த்தொகுதி. | — | ௰௨. |
| அருணகிரியந்தாதி. | - | ௪. |
| அபிராமியந்தாதி. | - | ௪. |
| சோணசைலமாலை. | - | ௪. |
| திருப்புகழந்தாதி. | - | ௪. |
| பழமலையந்தாதி, செந்திலந்தாதி. | - | ௩. |
| திருவருணைக்கலம்பகம். | - | ௮. |
| திருக்கருவைக்கலித்துறையந்தாதி. | - | ௪. |
| திருக்கருவைப்பதிற்றுப்பத்தந்தாதி. | | ௪. |
| கந்தரலங்காரம். | - | ௪. |
| மீனாக்ஷியம்மைபிள்ளைத்தமிழ். | - | ௮. |
| நால்வர்நான்மணிமாலை. | ஜி ௪ ந | |
| பெரியநாயகிவிருத்தம். | | ௪. |
| பெரியநாயகிகலித்துறை | | |
| பிக்ஷாடனநவமணிமாலை. | | |
| சௌந்தரியலகரி. | - | ௪. |
| திருமுருகாற்றுப்படை. | - | ௫. |
| கந்தரனுபூதி. | - | ௨. |
| போற்றிக்கலிவெண்பா. | - | ௨ |
| திருக்கருவைவெண்பாவந்தாதி | | ௪. |

இப்போது அச்சிற்பதிப்பிக்கின்ற புத்தகங்கள்.] நைடதவுரை-வெங்கைக்கோவையுரை-இயற்றமிழ்ச்சுருக்கம்-வைராக்கியதீபவுரை-நாலடிநானூற்றுரை-தாயுமானசுவாமிகள்பாடல்-நவநீதகைவல்லியமும்.

இனிமேல் அச்சிற்பதிப்பிக்கும் புத்தகங்கள்.] பிரபுலிங்கலீலையுரை-காரிகையுரை-பிரயோகவிவேகவுரை-தொல்காப்பியச்சூத்திரவிருத்தி, இலக்கணக்கொத்துரை-வெங்கைக்கலம்பகம்-மருதூரந்தாதி-கந்தரந்தாதி-ஏகாம்பரநாதருலா-திருமுருகாற்றுப்படையுரை-தானமாகச்செய்யப்பட்டிருக்கிற-இயற்றமிழ்விளக்கம்-சொற்பொருட்சிந்தாமணி-விரிபொருளகராதி-கோளதீபிகை-அணியியல்விளக்கம்-கூவக்கலம்பகம்-கணக்குப்புத்தகம்.

☞ அச்சிற்பதிப்பித்தான புத்தகங்கள்வாங்கவேண்டியவர்கள் சென்னபட்டணத்தைச்சார்ந்த ஒட்டேரிருசப்பேட்டையிலேகல்விவிளக்கவச்சுக்கூடத்திலும், சென்னபட்டணத்துள் - செங்காங்கடைக்கு அடுத்தநாராயணமுதலியார்தெருவிற்கிழண்டைவாடையிற்பொய்கைப்பாக்கஞ்சுப்பராயமுதலியாரிடத்திலும், புதுச்சேரியிலே முத்துவீராசாமிபிள்ளையவரிடத்திலும், கூடலூரிலேபாரதியார்வீட்டிற்பட்டாம்பாக்கஞ்சுப்பராயவையரிடத்திலும் நாகூரிலே ஈசுரன்கோயில்த்தெருச் சிவக்கொழுந்துமுதலியார்வீட்டிலே தியாகராயமுதலியாரிடத்திலும், ஆறகாடுராணிப்பேட்டைத் துறுப்பிற்சராபுஇராமலிங்கமுதலியாரிடத்திலும், வாங்கிக்கொள்ளலாம்.

---

சென்னபட்டணத்தில்
ஸ்ரீ-விசாகப்பெருமாளையரதுகல்விவிளக்கவச்சுக்
கூடத்தில் அச்சிற்பதிப்பிக்கப்பட்டது.